4th March 1961]

III—GOVERNMENT BILL.

THE MADRAS AGRICULTURAL INCOME-TAX (AMENDMENT) BILL, 1961.

* THE HON. SRI **M. A. MANICKAVELU** : Sir, I beg leave to introduce the Madras Agricultural Income-tax (Amendment) Bill, 1961. 9.30 a.m.

MR. SPEAKER : Motion moved—

"That leave be granted to introduce the Madras Agricultural Income-tax (Amendment) Bill, 1961".

The motion was put and carried and leave was granted.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I introduce the Bill.

MR. SPEAKER : The Bill is introduced.

IV.—GENERAL DISCUSSION ON THE BUDGET FOR THE YEAR 1961-62.

**MR. SPEAKER :** இன்றையதினம் சோஷலிஸ்டுக் கட்சித் தலைவர் ஸ்ரீ பக்கிரிசாமி பிள்ளை அவர்கள் பேசப்போகிறார்கள். அரை மணி நேரம் அவருக்காக ஒதுக்கியிருக்கிறேன். மொத்தம் 16 அங்கத்தினர்கள் பேசுவதற்கு இதுவரைக்கும் பெயர் கொடுத்திருக்கிறார்கள். பத்து மணியில் இருந்து 1½ மணிவரையில் உள்ள நேரத்தில் அவர்கள் பேசவேண்டும். ஆகவே ஒரு அங்கத்தினருக்கு 10 நிமிஷம் என்று ஒதுக்குகிறேன். இன்னும் அதிக அங்கத்தினர்கள் பேசப் பெயர் கொடுத்தால் 5 நிமிஷமாக அதைக் குறைக்க நேரிடும். தயவுசெய்து என்னிடம் யாரும் கோபித்துக் கொள்ளக்கூடாது என்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

* **SRI S. PAKKIRISAMI PILLAI :** கனம் தலைவர் அவர்களே, இந்த ஆண்டு நிதிநிலை அறிக்கையைச் சமர்ப்பித்த கனம் நிதி அமைச்சர் அவர்கள் தன் அறிக்கையில் வெகு விளக்கமாக எல்லோரும் எளிதில் புரிந்துகொள்ளும் நிலைமையில் விஷயங்களை எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். இதில் உள்ள எல்லா விவரங்களையும் வாசித்துத் தெரிந்துகொள்ளவே மனசு செல்கிறது. இந்த மாதிரியான ஒரு விளக்கவுரை, அவர் மேல்நாடுகளுக்குச் சென்று வந்தபின் தம் அநுபவங்களை பத்திரிகையில் எழுதி வருகிறார். அரசியல் ஞானக் கண்ணோட்டத்துடன் அந்தக் கட்டுரைகளை எவ்வளவு தெளிவாக, விளக்கமாக எழுதி வருகிறாரோ அதே ரீதியில் இந்த அறிக்கையும் அமைந்திருப்பதற்காக அவரைப் பாராட்டுகிறேன்.

(Sri S. Ranganatha Mudaliar in the Chair.)

பொதுவாக இந்த பட்ஜெட்டானது சர்வசாதாரணமானது. சர்வசாதாரணம் என்று சொன்னால் பண வருவாய்க்கு ஏற்ற மாதிரியான செலவினங்களைச் சரிக்கட்டிக் கொடுக்கப்பட்ட பட்ஜெட்தான். வருவாயை அதிகப்படுத்த எவ்வித நடவடிக்கையும் இல்லை. ஆனால் ஒரு விசேஷம் 11-வது வகுப்புவரையில் ஏழை பிள்ளைகளுக்கு இலவசக் கல்வி அளிக்க வசதி செய்திருப்பதுதான். ஆனால் இதில் ஏழைப் பிள்ளைகள் யார் என்று நிர்ணயிப்பதில்தான் கஷ்டம் இருக்கிறது. சுமார் 100 ரூபாய் வருமானம் உள்ளவர்கள்,